[10th February 1959

SRI A. GOVINDASAMY : கலெக்டர் அவர்கள் நிர்ணயித்தது அதிகம் என்று தெரிந்த உடன் விவசாய இலாகா டயரக்டர் அவர்கள் ஏன் அதன் பேரில் நடவடிக்கை எடுக்கவில்லை ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நடவடிக்கை எடுத்துக் கொண்டிருப்பதினால்தான் இதில் இன்னும் முடிவு செய்யப்படவில்லை.

SRIMATHI T. N ANANDANAYAKI : இப்போது அமைச்சர் அவர்கள் பதில் சொல்லும்போது விதைப்பண்ணைகளை நடத்துவதற்கு நிலங்களுக்கு லீலிங் வந்துவிட்டால் சரசமாக நிலங்கள் கிடைக்கும் என்று தெரிவித்தார்கள். இம்மாதிரி விதைப் பண்ணைகளுக்கு எடுக்கப்படும் நிலங்களுக்கு நஷ்ட ஈடு கொடுக்க மாட்டார்களா என்பதை அறியவிரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நஷ்டஈடு கொடுத்தாலும் நிலங்கள் சரசமாக கிடைக்கும் என்று நினைக்கிறேன்.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR: பல ஜில்லாக்களிலும் நடத்தப்பட்டுவரும் விதைப்பண்ணைகளை சர்க்கார் எடுத்துவிடப்போவதாக கேள்விப்பட்டேன். அது உண்மையா என்பதை அறியவிரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : பல பண்ணைகளிலும் அதிகப்படியான அளவில் உற்பத்தி பெருகவில்லை என்று காணப்படுவதால் சில பண்ணைகளை எடுத்துவிடுவது என்று முடிவு செய்யப்பட்டிருக்கிறது.

SRI S. NAGARAJA MONIGAR : இம்மாதிரி நிலங்களை வாங்கும்போது பொது மக்களுடைய ஒத்துழைப்பு அவசியம் என்கின்ற முறையில் அந்தந்த இடங்களில் இருக்கின்ற எம்.எல்.ஏ.க்கள், எம்.எல்.ஸி-க்கள் எம்.பி.க்கள் என இவர்களையும் கலந்து முடிவு எடுப்பார்களா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இப்போதும் பொதுவாக விதைப் பண்ணைகளை மேற்பார்வையிடுவதற்கும், அதனுடைய வளர்ச்சிக்காக ஆலோசனை கூறுவதற்கும் ஒரு அட்வைசரி கமிட்டி அமைக்க வேண்டுமென்று அரசாங்கம் உத்தேசித்திருக்கிறது.

SRI K. SATTANATHA KARAYALAR : இதற்கு குத்தகையை நிர்ணயிப்பது கலெக்டர் அவர்களா? அல்லது விவசாய இலாகா அதிகாரிகளாக இவ்விதம் நிர்ணயிக்கும்போது நிலச் சொந்தக்காரர்களுடைய வேண்டுகோளும் கவனிக்கப்படுகிறதா ? இவ்விதம் குத்தகை நிர்ணயிப்பது அக்கம்பக்கத்திலுள்ள நிலங்களை பார்த்துத்தான் குத்தகையை நிர்ணயிக்கிறார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : பொதுவாக கலெக்டர் அவர்கள்தான் அக்கம் பக்கத்திலுள்ள நிலங்களுக்கு இருக்கின்ற குத்தகையை கவனித்துபார்த்து, 100-க்கு 40 என்கிற அளவில் மதிப்பு போட்டு பார்த்து இதை நிர்ணயிக்கிறார்கள்.

*Special Irrigation Schemes*

* 183 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) 1957—58, 1958—59-ல் வடாற்காடு ஜில்லாவில் விசேஷ நீர்ப்பாசன திட்டங்களுக்கு எவ்வளவு தொகை ஒதுக்கப்பட்டது ?

(ஆ) எவ்வளவு செலவழிக்கப்பட்டது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM :

| | | RS. (IN LAKHS). |
|---|---|---|
| (*a*) | (i) 1957–58 .. .. .. .. | 4·40 |
| | (ii) 1958–59 .. .. .. .. | 3·57 |
| (*b*) | (i) 1957–58 .. .. .. .. | 4·40 |
| | (ii) 1958–59 up to the end of October 1958 | 2·50 |